# முன்னுரை

கல்விப் பணி வரிசைக்கு நல்ல முறையில் வரவேற்புக் கொடுத்த தமிழ்ப் பெருமக்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

2—2—1961ல் முதல் சுவடியின் வெளியீட்டு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. தமிழைப் பயிற்சி மொழியாக்கும் திட்டத்தில் சீரிய பணி புரிந்துவரும் கல்லூரித் தமிழ்க் குழுவின் தலைவர் திரு. ஜி. ஆர். தாமோதரன் அவர்கள் தலைமையில் கோவை ஸ்ரீ அவிநாசிலிங்கம் மனையியற் கல்லூரி முதல்வர் டாக்டர் இராஜம்மாள் தேவதாஸ் அவர்கள் வெளியீட்டுரை நிகழ்த்தினார்கள். பௌதிகப் பேராசிரியர் டாக்டர் திருஞானசம்பந்தம், தமிழ் வழியே பி. ஏ. பயிலும் மாணவர் திரு. இரத்தினசபாபதி ஆகியோர் பேசினர். பெருந்திரளாகப் பெருமக்கள் வந்து தம் ஆர்வத்தைப் புலப்படுத்தினர்.

தமிழகம் முழுவதிலும் மிகப் பேரார்வம் கொண்டு கல்விப்பணி வரிசையைப் போற்றி வரவேற்று வாழ்த்தியுள்ள யாவருக்கும் நன்றி செலுத்திக்கொள்கிறோம்.

'கல்வியின் நோக்கம்' என்ற இந்த இரண்டாம் சுவடியும் தமிழர்க்கு எம் சிந்தனைக் குழுவின் காணிக்கை.

கோவை
21–3–61

செயலர்.

★

2398

# பொய்க்கால் ஆட்டம்



மு. வரதராசனர்.

மனிதன் வாழவேண்டும்; அதற்கு இயற்கையறிவுமட்டும் போதவில்லை. பறவைவிலங்குகள் இயற்கையறிவின் துணைமட்டுமே கொண்டு வாழ்கின்றன. அவற்றின் வாழ்வு, பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்பு எவ்வாறு இருந்ததோ; அவ்வாறே இன்றும் உள்ளது. ஆனால் மனித வாழ்வு எவ்வளவோ மாறுதல்களை அடைந்திருக்கிறது!. அரசியல், பொருளியல், சமுதாயத்துறை, இயற்கையைப் பயன்படுத்தும் முறை முதலாயவற்றில் கணக்கற்ற மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. ஆகவே, இயற்கையறிவு மட்டும் கொண்டு மனிதனுல் வாழ முடியவில்லை. சில அறிவுத் துறைகளை வளர்த்து அமைத்து, அவற்றையும் கற்றுல்தான், மனித வாழ்வு செம்மையாக நடைபெற முடிகிறது.

தேனி முதலியவை சமுதாயமாய்க் கூடிக் கட்டுப்பாடாக வாழ்கின்றன. ஆனுல், அந்தத் தேனிச் சமுதாயமும் கட்டுப்பாடும் பல்லாலாயிர ஆண்டுகளுக்கு முன் இருந்தன போலவே இன்றும் உள்ளன. ஆகவே, படைப்புக் காலத்தில் அவை பெற்றிருந்த இயற்கையறிவே இன்றும் போதுமானதாக உள்ளது.

ஒரு நூற்றுண்டுக்கு முன் வாழ்ந்த ஒருவர், இன்று திடீரென்று நம்மிடையே தோன்றுவாராஞல், அவர் பல திகைப்புகளுக்கு ஆளாகித் தடுமாறுவார். நேர்ந்த மாறுதல்கள் அத்தகையன. மனித வாழ்வு தொடக்கம் முதல் இவ்வாறு பற்பல மாறுதல்களை அடைந்துவந்திருக்கிறது. ஆகவே, இயற்கை அறிவோடு கல்வி அறிவும் மனிதனுக்குத் தேவை ஆகின்றது.

அதனுல், கல்வியின் நோக்கம் வாழ்வு பற்றிய தெளிவு எனலாம்.

வாழ்வு பல துறைப்பட்டது. ஒருபால், சூழ்ந்துள்ள இயற்கை பற்றியும் அதைப் பயன்படுத்தும் முறைகள் பற்றியும் அறிந்து வாழ வேண்டும். அதற்கு அறிவியல் (Science) அறிவு தேவையாகிறது. ஒருபால், தன் நாடு பற்றியும் பிற நாடுகள் பற்றியும் அறிந்து வாழ வேண்டும். அதற்கு வரலாறு அரசியல் முதலியன பற்றிய அறிவு தேவையாகிறது. மற்றொருபால், சுற்றியுள்ள மக்களைப் பற்றியும் அறிந்து வாழ வேண்டும். அதற்குச் சமுதாய அறிவு தேவையாகிறது. இன்னொருபால், இவற்றிற்கெல்லாம் அடிப்படையாக, தன் உடல் பற்றியும் உள்ளம் பற்றியும் உயிர் பற்றியும் அறிய வேண்டும் அதற்கு உடல் நூல், உள நூல், மெய்யுணர்வுநூல் முதலியன தேவையாகின்றன. அவற்றை உணர்ச்சியும் கற்பனையும் கூட்டி உணர்த்தும் கலைகளும் தேவையாகின்றன.

இந்தத் துறைகள் ஒவ்வொன்றிலும் வாழ்க்கை பல வகைச் சிக்கல் உடையதாக வளர்ந்து வருகின்றது. அதனுல், அவை பற்றிய

அறிவு நூல்களும் விரிவு உடையன வாகப் பெருகி வருகின்றன. கற்ப தற்கு வாழ்நாள் போதவில்லை என்ற குறை உணரப்படுகிறது.

வாழ்க்கைச் சிக்கல்களைக் கண்டு அஞ்சியோ வெறுத்தோ, பலர் துறவு பூண்டு காட்டையோ மலை யையோ ஊர்ப்புறத்தையோ நாடி வாழ்ந்தனர். அவற்றைக் கண்டு அஞ்சவும் வேண்டா, ஒதுங்கவும் வேண்டா; அவற்றைத் துறக்கவும் வேண்டா. சிக்கல்களைக் குறைத்து, வாழ்க்கையை எளிமை உடைய தாக அமைத்துக் கொண்டால், எல் லார்க்கும் நன்மையாகும் என்ற உண்மையை உணர்ந்தும் உரைத் தும் வாழ்ந்து காட்டியும் தொண்டு செய்தார் ஒரு பெருமகன். அவர் காந்தியடிகள். அவருடைய நெறி யை அறிஞர்கள் பெரும்பாலோர் உணர்ந்து போற்ற இன்னும் ஐந் தாறு நூற்றாண்டுகள் ஆகும். அது வரையில், சிக்கலான வாழ்க்கைத் துறைகளும் சிக்கலான அறிவுத் துறைகளும் இருந்துவரும். ஆகவே, கல்வியும் இன்னும் சில காலம் சிக் கல் மிகுந்ததாகவே இருந்து வரும்.

இத்தகைய கல்வியை இன்றைய இளைஞர்கள் தக்க முறையில் பெற் றுப் பயனடைகிறார்களா என்று காண வேண்டும். கல்வியின் நோக் கம். வாழ்க்கையைப் பற்றிய தெளிவு பெறுதல் என்றால், அந்தப் பயன பெறுகிறார்களா என்று ஆராய வேண்டும்.

ஏதோ சில திட்டம், திட்டப்படி சில பல தேர்வுகள், தேர்வுகளுக் கென்று பாட நூல்கள், பாடங் களுக்காகச் சில வகுப்புக்கள் என்று ஏற்பாடுகள் அமைந்தன. ஆனால், பெரிய யந்திரத்தை இயங்க விட்டு விட்டு,பிறகு அதனை நெறிப்படுத்தி ஆளத் தெரியாமல் விழிக்கின்ற ஒருவனைப் போல் உள்ளது இன் றைய கல்வித் துறை. ஆகவே, நோக்கமும் பயனும் நன்கு ஆராயப் படவில்லை.

பல ஆண்டுகள் கற்ற ஒரு மாண வன் வாழ்க்கைக்கு உரிய தெளிவு பெற்றிருக்கிறானா என்று ஆராய் வதும் இல்லை; கற்ற பாடங்கள் உள்ளத்தில் பதிந்தனவா என்று ஆராய்வதும் இல்லை. காரணம் என்ன? எத்தனை மாணவர்கள் தேர் வில் தேறினார்கள் என்பதைப் பொறுத்தே ஒரு கல்விக்கூடத் துக்கு நல்ல பெயர் வருகிறது. ஆகவே, ஆசிரியர்கள் அந்த ஓட் டப் பந்தயத்துக்காகவே மாணவர் களைப் பயில்விக்க வேண்டியுள் ளது.

இந்தப் பயிற்சியாவது நேரான முறையில் உள்ளதா என்றால் அது வும் இல்லை. ஆசிரியர்க்கும் ஆங்கி லம் தாய்மொழி அன்று; மாண வர்க்கும் அது தாய்மொழி அன்று. கற்பித்தலும் கற்றலும் தாய் மொழி அல்லாத ஆங்கிலத்தின் வாயிலாக நடைபெறுகிறது. கார ணம் என்ன என்றால், நெடுங்கால அடிமை மனப்பான்மை; தாய் மொழிக்கு ஆற்றல் ஏது என்ற தாழ்வு மனப்பான்மையாக அது உருவெடுத்துள்ளது.

அறிவு என்பது குழந்தைப் பருவத்திலிருந்தே வளர்வது. குழந் தைப் பருவத்தில் அறிவின் அடிப் படை அமைகிறது. அப்போது தாய்மொழியின் வாயிலாகவே கருத்துக்களும் எண்ணங்களும் அமைகின்றன. ஆனால், பதினாறு பதினேழாம் வயதில் கல்லூரியில் புகுந்தவுடன், அந்த அடிப்படை யின்மேல் வேறு வகையில் கட்ட டம் கட்டத் தொடங்குகிறார்கள். பதினாறு ஆண்டுகள் அறிவு

வளர்ந்த வகை வேறு; பிறகு வளரும் வகை வேறு. தடுமாற்றம், திகைப்பு நேர்கின்றன. இவை முதிர்ந்தால் ஏமாற்றம், சோர்வு, நெறிபிறழ்வு என்பன விளைகின்றன. மாணவருலகம் கல்வியின் பயனும் பெறுமல், வாழ்வும் சீர்ப்படாமல் குலைகின்றது.

ஆங்கிலம் பிறமொழி; பிறமொழியின் வாயிலாக எல்லாப் பாடங்களையும் கற்றல் கூடாது.

குழந்தைப் பருவத்திலிருந்து சிந்தனை வளர்ந்த மொழியிலேயே, அறிவுத் துறைகளைக் கற்பது, இயற்கையான அறிவு வளர்ச்சிக்கு வழிகோலும். அது, தளர் நடையிட்ட கால்களாலேயே, பீடு நடை நடப்பதுபோல் ஆகும். அவ்வாறு அல்லாமல், சிந்தனையை ஒரு மொழியில் பயின்றுவிட்டு, வேறொரு மொழியில் அறிவை வளர்ப்பது, நடந்து பழகிய கால்களை விட்டு, பொய்க்கால்கள் கட்டிக் கொண்டு நடப்பது போல் ஆகும். இன்று ஆங்கிலத்தின் வாயிலாக உயர்கல்வி கற்பது, இந்தப் பொய்க்கால் ஆட்டமே ஆகும். இந்த ஆட்டம் விளையாட்டுக்காக, பொழுது போக்குக்காக ஒரு சிலர்க்குப் பொருந்தலாம்; மக்களாட்சியில் மக்கள் எல்லோர்க்கும் வாழ்வுக்கு உரிய கல்வி வழங்கும் திட்டத்திற்கு இது உதவவே உதவாது.

# நாம் இழந்தது

கடந்த காலத்தில் ஆங்கில மூலமாகப் படித்ததால் நாம் அடைந்த நஷ்டம் பெரிது, மிகப் பெரிது. சிந்திப்பதற்குப் பதிலாக - பகுத்தறிவதற்குப் பதிலாக-உருவேற்றிஒப்புவிப்பதிலேயே நாம் உறுதிபூண்டோம். பொருள்களைப் பற்றியும் நிலவரங்களைப் பற்றியும் உண்மையான தெளிவு பெறுவதற்குப் பதிலாக, ஒரு வகையான சொற்சிலம்பம் ஆடும் முறையைத் தெரிந்துகொண்டோம். இதன் விளைவு என்ன? சிந்தனையில் தனித்தன்மை மலரவில்லை; தாய் மொழியில் இலக்கியம் வளரவில்லை. நம்மை நாமே (அறிவில்) ஏழைகளாக்கிக் கொண்டோம். நாம் அவ்வளவு ஆசையோடு படித்த அந்த அயல் மொழியையாவது வளப்படுத்தினோமா? அதுவும் இல்லை; முடியவில்லை. ஒரு மொழி பேசுகிறவர்கள் இன்னொரு மொழியில் மதிப்புமிக்க இலக்கியம் தருவது என்பது, மிகமிக அபூர்வமான நிகழ்ச்சியாகும். பண்பாட்டை வளர்த்து மெருகூட்டுவதிலும், உண்மைநேயத்தை வளர்ப்பதிலும் பெரிய இலக்கியங்கள் ஆற்றல் மிக்க கருவிகளாகும். படித்தவர்களெல்லாம் தங்கள் மொழி அல்லாத அயல் மொழியில் ஈடுபாடு கொண்டதால்தான் பெருமைக்குரிய இலக்கியங்கள் தோன்றவில்லை; இவ்விளைவு தவிர்க்க முடியாதது. எனவே, கற்றவர்களெல்லாம் அயல் மொழியில் ஈடுபாடு கொண்டதால் அறிவு, சமுதாயம் ஆகிய இரு துறைகளிலுமாக இரட்டை நஷ்டம் ஏற்பட்டது

- பல்கலைக் கழக ஆணைக்குழு அறிக்கையிலிருந்து.

# கல்வியின் நோக்கம்

டாக்டர் மு. அறம்

கல்வியின் நோக்கம் என்ன? அது இரு தன்மையது. ஒன்று குழந்தைபற்றியது. அடுத்தது, சமுதாயம்பற்றியது. குழந்தையின் தனி வளர்ச்சியும், சமுதாயத்தின் பொது நன்மையும் கல்வியின் குறிக்கோள்.

குழந்தை நன்ருக வளரப் பெற்ருேருக்குத் துணையாக இருப்பது பள்ளிக்கூடம். ஒருகாலத்தில் எழுதுதல், வாசித்தல், கணிதம் ஆகியவற்றைக் குழந்தை கற்றுக்கொள்வதே கல்வியின் நோக்கம் என்று கருதப்பட்டது. இம்மூன்றும் முக்கியமானவை. இவை மூன்றும் இன்றும் கற்பிக்கப்படுகின்றன. ஆனல், கல்வியின் நோக்கம் இவற்றினும் விரிவானது என்று இப்போது கருதப்படுகின்றது.

குழந்தை நிறைய அறிவுபெற உதவுதல் கல்வியின் நோக்கம் என்று பொதுவாக நினைக்கிருர்கள். நிரம்பிய அறிவு முக்கியமே. ஆனல், குழந்தையின் அறிவுமட்டுமே வளர்ந்தால் அது ஒருபக்க வளர்ச்சியாகப் போய்விடும். குழந்தையின் உடல், உள்ளம், ஆன்மா இம்மூன்றின் ஒருமித்த வளர்ச்சியே கல்வியின் நோக்கம் என்று இப்போது அறிஞர்கள் கருதுகிருர்கள். குழந்தையின் முழு ஆளுமை வளர்ச்சியே கல்வியின் குறிக்கோள்.

கல்விக்கூடங்களில் உடல் வளர்ச்சிபற்றிச் சிறிதே கவனிக்கிருர்கள். ஆன்மா வளர்ச்சியே சிக்கலான ஒன்று குழந்தை உள்ள வளர்ச்சியை ஒழுங்காகக் கவனித்துவிட்டால் அது பெரிய காரியம் என்று சொல்லலாம். உள்ள வளர்ச்சி என்பது வெறும் செய்திகளின் அறிவு பெறுவதல்ல. உணர்ச்சி, சிந்தனை, செயல் இம் மூன்றும் ஒருமித்து வளர்ச்சியடைந்து சிறந்து விளங்குவதாகும். செய்தி அறிவைவிடச் சிந்தனை பெரிது. நல்லுணர்ச்சி, ஆக்கச் சிந்தனை இவற்ருேடு இணைந்த வாழ்க்கை – இதுவே முழு ஆளுமை வளர்ச்சி.

இதுவரை குழந்தையின் தனி வளர்ச்சிபற்றிப் பார்த்தோம். இனி சமுதாயம் பற்றிய கல்வியின் நோக்கத்தைப் பார்க்கலாம்.

கல்விக்கூடம் ஒரு பொது நிலையம். சமுதாயத்தின் ஆதரவில் அதன் நன்மைக்காக நடத்தப்படும் நிலையம். ஆகவே, கல்விக்கூடத்தால் சமுதாயத்திற்கு நிறைந்த நன்மை உண்டாக வேண்டும். பாடத் திட்டம் சமுதாயத்தின் மாறும் தேவைகளுக் கேற்ப மாறவேண்டும். மாணவர்க்குக் கல்விக்கூடம் அளிக்கும் பயிற்சி சமுதாயத்துக்குப் பயன்படுவதாக இருக்க வேண்டும்.

கல்விக்கூடத்தின் முதல் கடமை குழந்தைகளின் ஆளுமை வளர்ச்சியைக் கவனித்தல் என்றபோதிலும் அது அமைந்திருக்கும், ஊர், நகர சமுதாயத்தின் ஒரு முக்கிய மையமாக இயங்கவேண்டும். பள்ளி ஒரு தீவு அல்ல. பள்ளிக்கும் ஊர்ச் சமுதாயத்துக்கும் நெருங்கிய உறவு இருக்கவேண்டும் என்று இப்போது அறிஞர்கள் கருதுகிருர்கள். இதனல் பள்ளிக்கூடம் ஊர்ச் சமுதாயத்துக்கு நன்மை செய்வது ஒரு பக்கம் இருக்க, பள்ளிக்கூடத்தின் பாட போதனையே வாழக்கையோடு ஒட்டியதாக ஆகும்.

இன்னுமொன்று: கல்விக்கூடம்

வெளிச் சமுதாயத்தின் முன்னேடியாக, அதற்கு முன்மாதிரியாக, ஒரு சிறு லட்சிய சமுதாயமாக இலங்க வேண்டும். வெளிச் சமுதாயத்தில் கட்சியும், போட்டியும் இருக்கலாம். பள்ளிச்சமுதாயத்தில் ஒற்றுமையும் கூட்டுறவும் விளங்க வேண்டும்.

நம்நாட்டின் தற்போதைய கல்வி நிலை மோசமாக உள்ளது. ஆனால் இது மாறிவருகிறது. அறிவும், பண்பும், நல்லுணர்வும் சமுதாயமெங்கும் பரவி நம் பொது வாழ்வின் தரம் சிறக்க வேண்டும். இதற்குக் கல்விக் கூடங்களே தக்க கருவிகள். குழந்தையின் தனிவளர்ச்சி, சமுதாயத்தின் பொது நன்மை இவை கல்வியின் நோக்கம் எனக் கண்டோம். சிறிது சிந்தித்தால், இந்நோக்கம் நன்கு நிறைவேறத் தாய்மொழியே கல்விமொழியாக வேண்டும் என்பது புலப்படும். ●

---

# பொருளற்ற கல்வி

**திரு. வி. க.**

இந்நாளில் கல்வியென்பது பொருளற்றுக் கிடக்கிறது. குறிப்பிட்ட பாடங்களை நெட்டுருச் செய்து, பரீட்சையில் தேறிப் பட்டம்பெற்று ஒரு தொழிலில் நுழைதற்குக் கல்வி ஒரு கருவியாகக் கொள்ளப்பட்டு வருகிறது. நாளடைவில் அக்கல்விக்கும் வாழ்விற்கும் தொடர்பில்லா தொழிகிறது. இது கல்வியாகுமா?

'ஆங்கிலம் பயிறலே கல்விக்கழகு' என்று சிலர் கருதுகிறார்கள். அப்பயிற்சியுடையாரே கற்றவரென்றுஞ் சிலர் சொல்கிறார். ஆங்கிலம் பயிறலாகாது என்று யான் ஒருபோதுஞ் சொல்லேன்; உலக மொழியாகப் பரவிவரூஉம் அம்மொழிப் பயிற்சி இளைஞர்க் கிருத்தல் வேண்டும் என்றுஞ் சொல்வேன். ஆனால், 'ஆங்கிலத்திலேயே கல்வியறிவுண்டு. அதுவே வாழ்விற்கு உய்யுநெறி காட்டுவது' என்பன போன்ற கூற்றுக்கள் ஏற்றுக் கொள்ளுந் தகையன வல்ல.

ஆங்கில மென்பது ஒரு நாட்டு மொழி. அம்மொழிப் பயிற்சியிலேயே கல்வியறிவுண்டு என்று கருதுவது அறியாமை. கல்வி யறிவை எம்மொழி வாயிலாகவும் பெறலாம். கல்வி யறிவிற்கு 'இம்மொழி' 'அம்மொழி' என்னுங் கட்டுப்பாடில்லை. ஜெர்மனி, பிரான்ஸ் முதலிய நாட்டிலுள்ளோர் தத்தம் தாய்மொழிவிடுத்து, ஆங்கிலம் படித்தா கல்வி அறிவு பெறுகிறார்?...

நாம் தமிழ் மக்கள். நாம் நமது தாய்மொழி வாயிலாகக் கல்வி பெறலே சிறப்பு. அதுவே இயற்கை முறை. போதிய ஓய்வும் நேரமும் வாய்ப்பும் இருப்பின் வேறு பல மொழிகளையும் பயிலலாம்.

தமிழில் 'அக்கலை இல்லையே; இக்கலை இல்லையே; சிறப்பாக சையன்சு என்னும் அறிவுக்கலை இல்லையே' என்று சிலர் கூக்குரலிடுகிறார். 'ஆங்கிலத்தில் முதல் நூல்களாகவா எல்லாக் கலைகளும் பிறந்தன' என்பதை அச் சகோதரர்கள் உன்னுவார்களாக. ...ஆங்காங்கே அறிஞர் கண்ட உண்மைகள் மன்பதைக் குரியன. அவற்றை நாடு, மொழி என்னுஞ் சிறைகளிடுவதினுஞ் சிறந்த மடமை பிறிதொன்றில்லை. அவ்வுண்மைகளை அவரவர் தத்தம் மொழியில் பெயர்த்து அறிவு பெறல் வேண்டும். அவ்வழியிலேயே உலகம் இயங்கி வருகிறது.

[ சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து என்னும் நூலிலிருந்து ]

# இங்கே இல்லையோ?

ம. ரா. போ. குருசாமி

1906ல் வங்காளத்திலே ஒரு கழகம் தொடங்கப்பெற்றது. தேசியக் கல்விக் கழகம் (National Council of Education) என்பது அதன் பெயர். நம் நாட்டுப் பண்பாட்டு மரபுக்கு ஏற்றவாறு கல்வித் திட்டத்தை அமைக்க வேண்டும் என்பதே அதன் தலையாய நோக்கம். இந்நாட்டு மரபுக்கு ஏற்பக் கற்றாலன்றி அது தேசியக் கல்வியாக இருக்க முடியாது என்பது அதனைத் தோற்றுவித்தவர்களின் உறுதியான நம்பிக்கை. கவிஞர் இரவீந்திரநாதத் தாகூர், அரவிந்தர், சுரேந்திரநாத பானர்ஜி போன்ற பெருமக்களின் முயற்சியாலும் ஆதரவாலும் அக்கழகம் தோன்றியது; அற்புதமாகப் பணியாற்றிவருகிறது.

பொறியியல், தொழில் நுட்பம் ஆகிய துறைகளில் அத்தேசியக் கல்விக் கழகம் ஆற்றியுள்ள பணி அளவிடற்கரிய பெருமை உடையது. அக்கழகம் உருவாக்கிய பொறியியல் வல்லுநர்களைப் பழைய ஆங்கிலேயர் அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவில்லை. 'தேசியம்' என்ற சொல்லுக்கு ஏற்ற பண்பும் அமைந்துவிடுமாயின், 'பரதேசி' அரசாங்கம் எப்படி ஆதரிக்கும்! ஆனால் இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், வங்காளத் தேசியக் கல்விக் கழகப் பொறியியல் அறிஞர்களின் தரத்தையும், திறத்தையும் அயல் நாட்டு யேல், ஹார்வர்டு, மிச்சிகன் முதலிய பல்கலைக் கழகங்கள் ஏற்றுப் போற்றின!

தேசியக் கல்விக் கழகத்தின் திட்டம் தொடக்கப்பள்ளியிலிருந்து கல்லூரி முடியவுள்ள எல்லாத் தரத்துப் படிப்பையும் தன்னகத்தே கொண்டது.

அத்தனை படிப்பும் 'சர்வ வல்லமை படைத்த ஆங்கில மொழி'யில் நடைபெறவில்லை. அடியிலிருந்து முடிவுவரை பயிற்சி மொழியாகத் தேசியக் கல்விக் கழகம் அமைத்துக் கொண்டது வங்க மொழிதான்.

தாய்மொழியைப் பயிற்சி மொழியாகக் கொண்டால், கல்வியின் தரம் குறைந்துவிடுமே என்று கூக்குரலிடும் பெரியவர்கள் வங்காளத் தேசியக் கல்விக்கழகத்தைச் சற்று நினைந்து பார்க்கட்டும்.

கல்வியின் நோக்கம் என்ன? எவையேனும் சில செய்திகளைப் புரிந்தும் புரியாமலும் உருவேற்றி ஒப்புவிப்பதும், சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை என்று பட்டங்கள் வாங்குவதும்தானா? இல்லை, இருக்க முடியாது.

உள்ளம் விரிய-அறிவுப்பசி ஏற்பட - கற்பனை மலர - ஆக்கச் சிந்தனை கிளர்ந்தெழ - ஆளுமை உயர-வழிவகுப்பதே கல்வியின் நோக்கமாக இருக்க வேண்டும் இத்தனைக்கும் அடிப்படையாகக் கல்வியின் நோக்கம் தன்னம்பிக்கையைவளர்ப்பதாக இருக்க வேண்டும். தன்னம்பிக்கை முளைவிட வேண்டுமாயின் அயன்மை உணர்ச்சிக்கு இடம் இருக்கக்கூடாது. அயன்மைச்சூழல் மறைவதற்கு முதலில் வேண்டிய நடவடிக்கை தாய்மொழி வழியில் பயிலச்செய்வதே யாகும். கல்வி என்று நுழைந்த உடனேயே அயல் மொழியிலே தொடங்கினால், மருட்கையும் மயக்கமும் ஏற்படுவது இயற்கை. இந்த மருட்கையையும்

மயக்கத்தையும் மனத்திலேஎழுப்பி விட்டு, அதற்குமேல் எவ்வளவு தான் கற்பித்தாலும் அவையெல்லாம் சுமையாகத்தான் குவியும்; கல்வியின் நோக்கம் நிறைவேருது.

வங்காளத்தில் தோன்றியஇந்தத் தேசிய இயக்கத்தைப்பற்றிப் பாரதியாருக்குத் தெரியும். நம் தமிழ் நாட்டிலும் தேசியக் கல்விக்கு ஒரு ஏற்பாடு செய்யவேண்டும் என்று அவர் முயன்றிருக்கிருர். 'தேசியக் கல்வி' என்ற தலைப்பில் மிக விரிவான கட்டுரை எழுதியிருக்கிருர். வங்காளத்தில் கவிஞர் தாகூர் முன்னின்று தொடங்கிய தேசியக் கல்வி இயக்கம் வேரூன்றித் தழைத்தது. அந்த நினைப்பிலே பாரதியார் தமிழ்நாட்டிலும் தூண்டிவிட்டுப் பார்த்தார். முயற்சி பயன் அளிக்கவில்லை. அவருக்கு இருந்த ஆர்வத்தைப் பாருங்கள்:

"அனுவசியமான தண்டத்திற்கெல்லாம் தமிழர் பணத்தை வாரி இறைக்கிருர்கள்.'கான்பரென்ஸ்' என்றும் 'மீட்டிங்' என்றும் கூட்டங்கள் கூடி விடிய விடிய வார்த்தை சொல்லுகிருர்கள். கிராமங்கள்தோறும்தமிழ் பள்ளிக்கூடங்கள் போடுவதற்கு யாதொரு வழியும் செய்யாமல் இருக்கிருர்களே!

"அ............ன்"

"மேலே காட்டிய குறியின் பொருள் யாது?

"தமிழ் நாட்டில் தேசியக் கல்வி நடைபெற வேண்டுமாயின் அதற்கு அகர முதல் னகரப்புள்ளி இறுதியாக எல்லா வ்யவஹாரங்களும் தமிழ் பாஷையில் நடத்த வேண்டும் என்பது பொருள்.

"...பாடசாலைகள் ஸ்தாபிக்கப்பட்டால், அங்கு நூல்களெல்லாம் தமிழ்மொழி வாயிலாகக் கற்பிக்கப்படுவது மன்றிப் பலகை, குச்சி எல்லாவற்றுக்கும் தமிழிலே பெயர் சொல்ல வேண்டும்; 'ஸ்லேட்', 'பென்ஸில்' என்று சொல்லக்கூடாது"

இவ்வளவு ஆர்வமாக அவர் எழுதினுர். ஆனுல் வங்கத்தில் ஏற்பட்ட பயன் இங்கே தோன்றவில்லை. காரணம் என்னவாக இருக்கும்?

1956ல் வங்காளத்துத் தேசியக் கல்விக் கழகத்தின் பொன்விழா நடைபெற்றது. அப்போது விரிவுரை யாற்றிய நம் குடியரசுத் துணைத் தலைவர்,

"விழுமிய நோக்கங்களுக்காக அறிவாற்றலோடும் உணர்ச்சிச் செறிவோடும் தியாக நிறைவோடும் பாடுபடுவதில் வங்காளத்து மக்கள் தனிச் சிறப்புப் பெற்றிருக்கிருர்கள்"

என்று பேசியுள்ளார்.

இங்கே அவை இல்லையோ!? ●

## கேவல முறை

வழக்கிலுள்ள கல்வி முறைகளில் மனிதனின் பல்வேறு அமிசங்களுள் ஓர் அமிசமான அறிவிலேயே கவனம் செலுத்தப்பட்டிருக்கிறது. அதுவும் அதை மலரச் செய்வதற்கு மாருக, மகிழச்செய்வதாய் உள்ளது. இம் முறையில் அறிவின் மகிழ்ச்சியில் அல்லது உற்சாகம் கொண்டுள்ளவர் கூறுகிறபடி வெறும் படிப்பில் கவனம் செலுத்தப்படுவதால் நான் அதை 'வெற்றுமுறை' அல்லது கேவலமுறை என்று சொல்லுகிறேன்.

- விநோபா அடிகள்

# பாதகம்

காந்தியடிகள்



நம் கல்லூரிகளில் 'கல்வி' என்ற பெயரால் எதையெதையோ ஏராளமாக வழங்குகிறார்கள். அவை அத்தனையும் வெறும் பாழ் என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை. வெறும் பாழ் என்பது மட்டுமல்ல, படித்தவர்களிடையே வேலையில்லாத் திண்டாட்டத்தையும் இன்றைய கல்வி உண்டாக்கிவிட்டது. இதைவிட மோசமான விளைவு என்ன வென்றால், நசுக்கிக் கசக்குகின்ற கல்லூரிகளிலே சிக்கிக் கொண்ட மாணவர்களும் மாணவிகளும் மன நலம் உடல் நலம் இரண்டையும் இழந்துவிடுகின்றார்கள் ... என்னுடைய திட்டத்தின்படி இப்போதுள்ளதைவிடப் பெரிய நூல் நிலையங்களும், பெரிய ஆய்வுக் கூடங்களும், பெரிய ஆராய்ச்சி நிலையங்களும் ஏராளமாக இருக்கும். அவற்றிலிருந்து இரசாயன அறிஞர்களும், பொறியியல் வல்லுநர்களும் பிறரும் அணியணியாக வெளிவந்து, நாட்டுக்கு உண்மையான தொண்டர்களாகப் பணிபுரிவர்; தங்களுடைய உரிமைகளையும் தேவைகளையும் வரவர அதிகமாக உணரத் தொடங்கியுள்ள நாட்டவரின் ஆவல்களை அவர்கள் நிறைவேற்றுவார்கள். இந்த அறிஞர்களெல்லாம் அயல் மொழியில் பேசமாட்டார்கள்; மக்களின் மொழியிலேயே பேசுவார்கள். அவர்கள் பெற்ற அறிவு மக்களின் பொதுச் சொத்தாக இருக்கும். கிளிப்பிள்ளைப் பாடமும் நகல் எடுக்கும் வேலையும் இராது; உண்மையான சொந்தப் படைப்புகள் உண்டாகும் ... ... ... ஆங்கிலத்தை ஆங்கிலேயன் போலவே பேசவும் எழுதவும் முயல்வது நிறைவேற முடியாத முயற்சி; இந்த முயற்சியால் உருவேற்றி உருவேற்றிச் சாரம் செத்த மூளையும், அனேகமாகச் செயல் இழந்துவிட்ட மனமும் கொண்ட பி. ஏ.க்களும் படைபடையாக வருகின்ற நிலைமை நான் காணும் அரசாங்கத்தில் இராது. இன்று இப்படி வெளியேறியுள்ள பட்டதாரிப் படைகளில் பெரும்பாலோருக்கு வேலையில்லை. வேலை கிடைத்தாலும் குமாஸ்தா வேலை தான் கிடைக்கும். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேலாகப் பள்ளியிலும் கல்லூரியிலும் சேர்ந்த அறிவு இந்தக் குமாஸ்தா வேலைக்கு எந்த வகையிலும் பயன்படுவதில்லை ... நாட்டுக்கோ தனி மனிதனுக்கோ பயன்படாத ஒரு பயிற்சிக்காகச் செலவழிப்பது பாதகமாகும். என்னைப் பொறுத்தவரையில் தேசம் முழுவதற்கும் பயன்படுவது தான் தனி மனிதனுக்கும் பயன்படும்.

(ஹரிஜன் - 9, 30-7-1938)

# கல்வியின் நோக்கம் தாய்மொழிப் பிணையலே

பல்கலைச் செல்வர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் M. A., B. L., M. O. L.

கல்லூரியிலோ பிறஇடத்தோகற்பது ஏன்? "என்ஒருவன் சாந்துணையும் கல்லாதவாறு" என்று கேட்கிறார் வள்ளுவர் - சாந்துணையும் கல்வி என்றால், அது வாழ்வேயாம். உலகமும் நாமுமாகப் பிணைந்த பிணையலில் பல வகையில் ஊடாடி ஒன்றாகி அழகிய மாலையாய் நாமும் உலகமும் சிறந்து பயன்படுகிறோம். இந்த ஊடாட்டத்தைப் போராட்டம் என்பானேன்? உலகத்தோடொட்ட ஒழுகல் எனலாகாதா? இதுவே வாழ்வாங்கு வாழ்தல்.

இந்த ஊடாட்டத்தில் 'திமர்' எனப் பல மோதல்கள் எழும்; அப்பொழுதைக்கு, இப்பொழுதே சொல்லிவைத்தலே கல்வி. ஈடுகொடுக்கப் பழகுவதே கல்வி. கல்வி நிலையம் ஒரு பாத்தி; அதுவே, மெல்ல மோதலிற் பழகும் சிறு சோதனைக் களம்.

கண்ணுடையர் என்பர் கற்றோர் என்பது குறள். கண்ணைத் திறப்பது கல்வி. நம்முள்ளே முடிக்கிடக்கும் ஆற்றல் அத்தனையும் முழு வளர்ச்சியடையப் பழகுதலே கல்வி. கண்ணெதற்கு? உலகினைப்பார்க்க, அறிய, மகிழ - அதனைப் பயன்படுத்திச் செயலாற்றவே ஆம். உலகமின்றிக் கண் இல்லை. கண்ணின்றி உலகம் இல்லை. முழு நிறைவு உள்ளும் புறமும் வளர்தலே கல்வி. நாமோ, அறிவும் உணர்வும் செயலுமாக அமைகின்றோம். இவை அடிமனமும் மேன்மனமுமாக இயைந்து போராட்டமின்றி நிறைவு பெறுதல் வேண்டும். ஒவ்வொருவருக்கு ஒவ்வொன்று எளிது. இந்தச் சிறப்பு படைப்பாற்றலாக நிறைவு பெறுதல் வேண்டும். அப்போதே கண் திறந்தது எனலாம். இங்கெல்லாம் உள்ளத்தைத் தொடும் உணர்வே நனவு நிலையிலும் நனவிலி நிலையிலும் நம்மை இயக்கி வெற்றி தருகிறது.

மக்களே எண்ணும் இயல்புடையார். எண்ணம் என்றால் என்ன? உள்ளுக்குள்ளாகத் தொடங்கும் பேச்சு என்பார் ஓர் ஆசிரியர். இதனை ஒப்புக்கொள்ளாதவர்களும், பெரும்பான்மையும் நம் எண்ணங்கள் சொல்லாகவே விளங்கக் காண்கின்றனர். வெறுஞ் சொல்லாக இருந்தால் நெஞ்சைத் தொடுமா? பொருள் நிறைந்ததாக-வாழ்வோடு இயைந்ததாக-இருந்தாலன்றோ நெஞ்சம் ஈடுபடும், அக்கறை கொள்ளும், அயராது உழைத்து இன்பம் பெறும்? சொல் என்றால் மொழி தானே? எந்த மொழி நமக்கு இயல்பானது? நனவிலி மனத்திலும் வேர் ஊன்றி நிற்பது – உணர்வோடு ஒன்றுவது - நம் வாழ்வோடு ஒன்றுவது - ஒருவன் பிறந்த சூழலில் தாய்ப்பால் உண்டதிலிருந்து தாய்ப்பாலோடு இனித்து ஒன்றிய அவன் தாய்மொழியே ஆம். ஆதலின் அந்த மொழியில் கற்பதே இயல்பு. பிற எல்லாம் செயற்கை; நெஞ்சைத்தொடுவதில்லை; வெறுஞ் சொல்லாரவாரமே. இச் செயற்கை நிலையில் நனவிலி நிலைக்கும் நனவு நிலைக்கும் இடையே போராட்டம் எழும்; மனக் கோளாறுகளும் உலகக் கோளாறுகளும் வளரும். ஆனால், தாய்மொழியிற் பேசிவரும் போது பிற மொழிச் சொற்களும் வரும்; கார் ஓட்டியின் மகன் பிறந்ததுமுதல் 'கார்' என்ற சொல்லையே

கேட்டு வருவதால் அவனுக்கு அது தாய்மொழிச் சொல்லேயாகி இனிக்கும். பிறமொழிக் கலைச் சொற்களும் இவ்வாறு பழகிவரும் நிலையில் தாய் மொழிச் சொற்களே ஆம். எனவே, நம் கண் திறப்பது இவ்வாறுதான்.

கண் பார்ப்பதோ எதனை? நாம் நம் உடலோடும் உள்ளத்தோடும் குடும்பத்தோடும், உற்றார் உறவினரோடும், ஊராரோடும், நாட்டோடும், பொருளாதாரத்தோடும், அரசியலோடும் அன்பும் அழகும் உண்மையுமே வடிவான கடவுளோடும் ஊடாடி வருகின்றோம். இதற்கேற்பப் பழகும் கல்வி எந்த மொழியில் நடைபெறுவது "உலகத்தோடு தொடர்பு கொள்ள உலக மொழி யொன்றை அறிவதே அந்த அரங்கில் தொண்டு செய்ய வருவார்க்கு நல்லது. உலகமறிந்தவற்றில் பெரும் பகுதி அங்குக் கிடைப்பதாக இருக்கும் மொழியே நல்லது. அத்தகைய மொழி ஆங்கிலமாம்; நாம் ஒரு சிறிது பழகிய மொழியும் அதுவே. ஆனால், தாய்மொழி போல அது உள்ளத்தைத் தொடுவதில்லை. உலகம் நீங்கிய பிற உலகச் சூழ்நிலையில் தாய்மொழியே தமிழ் நாட்டில் பயனுடையதாகும்.

கல்வி நமக்குமட்டும் அன்று; நாம் கற்ற கல்வியின் நிறைவு நம் சமுதாயம் முழுவதும் பாயவேண்டும். பாலாற்றில் வெள்ளம் ஓடுகிறது; ஆனால், அந்த வெள்ள நீர் கீழேயும் பொசிந்து தேங்கி ஓடுகிறது; வெள்ளம் போனபின் தோண்டினால் கீழே உள்ள ஊற்று உலகினை ஊட்டி வளர்க்கிறது. கற்றவன் இவ்வாறு சமுதாயத்தில் உயர்ந்தே வாழ்ந்தாலும், அவன் அறிவு அவன் தாய்மொழி வழியே புழங்குவதால், எழுதுவதால், பேசுவதால், சமுதாயம் முழுவதிலும் உள்ளூரப் பொசிகிறது. அவன் மறைந்த பின்னும் இன்ப ஊற்று கிறது. கம்பன் செய்த வியத்தகு செயல்-வள்ளுவர் செய்த வியத்தகு செயல் - இந்த வகையில் எழுந்தனவே ஆம். ஆங்கிலேயர் கல்வி முறையின் அடிப்படையும் இது தான். ஒருசிலர் கற்றால் பலரிடம் அந்த அறிவு பொசியும் என்றே அவர்கள் கூறினர். ஆனால், ஏன் பயன்படவில்லை? நீரானால் பொசியும்; இரும்பை உருக்கி ஓடவிட்டால் பொசியுமா? தாய்மொழிவழிக் கல்வி இல்லாமையாலேயே வெளியுலகத்தை அன்றிச் சமுதாயத்தில் வேறு ஒரு துறையிலும் பொசிவதற்கு வழியில்லை.

பொசிவது ஒருபுறம் இருக்கட்டும். கூடிக் குலாவிப் பழகுவது எந்த மொழியில் முடியும்? தாய் மொழியில்தான். தாயோடு கற்றவன் பழகுவது எதில்? தலைமை அலுவலாளன் கூலியாளோடு பழகுவது எதில்? ஆளுவோன் குடிமக்களோடு பழகுவதில் பழகுவது எதில்? தாய்மொழியில்தானே? குடியரசில் "எல்லோரும் ஓர் நிறை; எல்லோரும் ஓர் இனம்; எல்லோரும் இந்நாட்டு மக்கள்" என்ற எண்ணம் தாய்மொழிப் பழக்கத்திலேதான் எழுந்து நிலைபெறும்.

மொழிக்கு ஆற்றலில்லை என்பதில்லை. இதுவே மொழி நூல் கூறும் உண்மை. பழக்கமில்லாமையே குறை. உலக மொழி கற்றவன் தன் தாய் மொழியிற் பழகினால் தாய்மொழி உலக மொழி போல் வளம்பெறும்.

எனவே, கல்வியின் நோக்கமே தாய் மொழிவழியே உலகத்தோடு பிணைந்து நிறைவு பெற்று முழுப் பயனையும் உலகமும் நாமும் பெறுவதே ஆம்.

# ★ எனது அனுபவம் ★

திரு. பா. சுப்பிரமணியன்
(வித்யாலயக் கிராமியக் கல்லூரி)

நெஞ்சம் உணர்கிறது. அறிவு ஆராய்கின்றது. உணர்வு—அறிவு காரணமாக உள்ளத்தில் போராட்டம் எழுகின்றது. நெஞ்சம் தமிழ் வாழ வேண்டும், வளர வேண்டும் என்று உணர்த்துகிறது. பயிற்சி மொழி தமிழாயின் ஆங்கிலத் தரம் குறைந்துவிடுமோ என்று அறிவு அஞ்சுகிறது. இந்த அச்சம் காரணமாகத் தமிழ் நெஞ்சம் அல்லல் படுகிறது. தமிழ் மொழியே எல்லாம் என்பது ஒருபுறம். ஆங்கிலமே அனைத்தும் என்பது மறுபுறம். இது இன்றைய தமிழகத்து நிலை.

ஆங்கிலம் பயிற்று மொழியாக இருப்பதால் நன்மைகள் பல உண்டு என்பதில் ஐயமில்லை. ஆங்கிலத்தில் நூல்கள் மிகுதியாக உள்ளன. நூல்கள் பல இருந்து என்ன பயன்? நூல்கள் பல இருந்தும் அதனைப் படித்துப் பயன் பெறுவோர் மிகச் சிலர். மூல நூல்களை மாணவர்கள் கற்பது மில்லை; கற்க நினைப்பதுமில்லை. படித்தாலும் புரிவதுமில்லை. இதனால் எளிதில் புரிந்துகொள்ளத் தெருவில் விற்கும் குறிப்பேடுகளை நாடுகின்றனர். இது மாணவர்கள் குற்றமல்ல; கல்வி முறையிலுள்ள குறைபாடு.

இன்று ஆங்கிலம் கற்றோர் தமிழ் வேண்டா வென வெறுக்கின்றனர். தமிழில் பேசுவது நாகரிகமற்ற செயல் எனவும் கருதுகின்றனர். மற்றொரு சாரார் – தமிழ் மட்டும் கற்றவர்கள் - ஆங்கிலம் வேண்டாத ஒன்று; நம் பண்பாட்டு முறைக்கு ஒவ்வாது என்கின்றனர். இவ்விரு சாராரும் இரண்டு இறுதியிலிருந்து கூறுகின்றனர். இவ்விரண்டும் உண்மையை மிகைப்படுத்துவன. நாம் உண்மையை உணர்தல் கடன்.

ஒன்றுமட்டும் தெளிவாகத் தெரிகிறது. தமிழ் வளர்ச்சிக்கு ஆங்கிலம் உதவுவது. அறிவு நூல்கள் பல ஆங்கிலத்தில் இருக்கின்றன. அவற்றினைக் கற்க ஆங்கில அறிவு வேண்டும். அறிவு வேண்டும் என்பதற்காக அறிவில் குழப்பம் இருப்பது நல்லதல்ல அறிவில் தெளிவு வேண்டும். கற்ற கல்வி பயனளிக்க வேண்டும். இது தாய் மொழி மூலம் கற்பதால்தான் இயலும். தமிழில் படிப்பதால் ஆங்கிலத் தரம் குறைந்துவிடும் என்ற அச்சம் இருக்கிறது. இன்று பயிற்று மொழி ஆங்கிலமாக இருந்தும் கூட அவ்வச்சம் இருந்துகொண்டு தான் இருக்கிறது. இவ்வச்சம் வேண்டாத ஒன்று. நமக்கு வேண்டுவது அறிவு, அறிவியல்தெளிவு; மொழியறிவுஅன்று. மொழி அறிவு வேண்டுமாயின் மொழியைக் கற்போம். நாம் மொழி அறிவுபெற இலக்கியத்தைக் கற்கிறோம். அல்லல் படுகிறோம். ஆற்றாது கண்ணீர் விடுகிறோம். இலக்கியத்தைக் கற்பதால் மொழி அறிவும் இல்லாமற் போகிறது. ஆதலின் தமிழில் பாடங்களைக் கற்போம்; ஆங்கிலத்தை ஒரு மொழியாகப் பயில்வோம். இது தான் சிறப்பு.

இது என்னுடைய அனுபவத்திலிருந்து கூறுகின்ற ஒன்று. இரண்

2398



டாண்டுகள் ஆங்கிலத்தைப் பயிற்று மொழியாகக் கொண்டுள்ள கல்லூரியிலும் மூன்றுண்டுகள் தமிழைப் பயிற்றுமொழியாகக் கொண்டுள்ள கிராமியக் கல்லூரியிலும் பயின்றேன். நான் தமிழில் படித்ததால் சுமை ஏதும் காணவில்லை. மாருக ஒரு தெளிவு ஏற்பட்டது. இது தாய் மொழியில் கற்றதால் வந்த சொத்து. இது நான் உணர்ந்து–தெளிந்து கூறுகின்ற ஒன்று.

ஆங்கிலம் கடினமான மொழி. அதைக் கற்பது எளிதன்று அதிலும் நம் மாணவர்கள் மிகவும் அல்லல் படுகின்றனர். இதற்குக் காரணம், இரண்டு மொழிகளும் அடிப்படையில் வேறுபட்டுநிற்பதுதான். ஆங்கிலத்திலுள்ள பெரிய தொல்லை இது. சொற்களைத் தெரிந்து கொண்டால் மட்டும் போதாது. அதை வாக்கியத்தில் அமைத்துக் கோவைப் படுத்துவது பெரும் பாடாகி விடுகிறது. இதனுல் நம் மாணவர்கள் பெரிதும் இடர்ப்படுகின்றனர்.

இன்றைய ஆராய்ச்சியாளர்கள் கூறுவது இது. மொழி கற்பதில் இரண்டு பயன்கள் உள. (1) புரிந்து கொள்வது. (2) புலமை பெறுவது. மொழியின் அடிப்படை நோக்கம் புரிந்துகொள்வதுதான். மொழி எண்ணத்தை வெளிப்படுத்தும் ஒரு கருவி. அவ்வளவே. வேற்று மொழியில் புலமை பெறுவது மிகவும் கடினம். இன்றைய அறிஞர்கள் இதைத்தான் தெளிவாக உணர்த்துகின்றனர். பிற மொழியைக் கற்கலாம். கற்பவை யாவும் தாய் மொழியின் ஆக்கத்திற்குப் பயன்தர வேண்டும். கற்றதை அனைத்தும் தாய் மொழி மூலம் வெளிப்படுத்துவதுதான் சிறப்பு என்கின்றனர். இதனுல் அடிப்படை நோக்கம் நிறைவேறுகிறது. தொல்லையும் நீங்குகிறது. இது அறிவுக்குப் பொருத்தமானது. இவ்வழியே இயற்கை வழியும்கூட. இயற்கை வழி நடப்பதே அறிவுடைமை.

நாம் மாணவர்கள். கற்றவர்கள்; கற்பவர்கள். நாம் வாழ்வது தமிழ் நாட்டில். பேசுவது தமிழ் மொழி. நாம் தாய் மொழியைப் புறக்கணிக்க முடியாது. புறக்கணிப்பது தமிழ் மகன் கடனும் அன்று. பிற மொழிக்கு அடிமையாவது சிறப்பன்று. பிற மொழிகளை வெறுப்பதும் அறிவுடைய செயலன்று. தமிழில் கற்போம். பிற மொழிகளைத் தமிழ் வளர்ச்சிக்குத் துணையாக்கிக் கொள்வோம். இதுதான் நல்லது. தாய் மொழியில் கற்பதே நல்லது. அதுவே நம்முடைய பிறப்புரிமையும்கூட. இதைத் தமிழ் மாணவர்கள் உணர வேண்டும். உணர்ந்து செயல்பட வேண்டும். ●

## நூறு சத அறிவு

தற்காலப் பள்ளிகளில் 35 சத விகிதம் மார்க்கு வாங்கினுல் அடுத்த வகுப்பிற்கு அனுப்பிவிடும் ஏற்பாடு ஏன் செய்யப்பட்டிருக்கிறது? இதன் காரணம் தெரிந்ததே. இத்திட்டத்தை வகுத்தவர்களுக்கு நாம் இன்று குழந்தைகளின் தலையில் அவர்களுக்குப் பயன்படாத, தேவையில்லாத ஒன்றைச் சுமத்துகிறேம் என்று தெரியும். இங்கிலையில் நூற்றுக்கு நூறு வேண்டுமென்று எப்படிக் கேட்க முடியும்? ஆனுல் புதிய கல்வியிலோ பிள்ளைகள் நூற்றுக்கு நூறு அறிவு பெறவேண்டுமென்று நான் எதிர் பார்ப்பேன்.

— கல்விச் சிந்தனைகள் என்ற நூலிலிருந்து

# வெள்ளை வேட்டி

'குரு'

'கல்வியின் நோக்கங்கள் யாவை?' என்ற இந்தக் கேள்விக்குப் பல கோணங்களி லிருந்து பல விடைகள் கூறலாம். எத்தனை விடைகள் கூறினாலும், எத்தனை வினாக்கள் கேட்டாலும்–ஒன்றுமட்டும் உறுதி; அதாவது, விளக்கம் பெறுவது கல்வியின் அடிப்படை நோக்கங்களில் முதன்மையானது. பொருள், இடம், காலம், கருத்து...... இப்படி விரிந்து கிடக்கும் எந்தத் துறையில் நுழைந்தாலும், விளக்கம் பெறுவதே முதன்மையான நோக்கம். இந்நோக்கம் நிறைவேறாமல் கல்வி முற்றுப்பெறுவதில்லை

கல்வி என்றதுமே பள்ளிக்கூடம், கல்லூரி முதலான 'கல்வி' நிலையங்களில் எழுதிப் படிப்பதையே நாம் நினைக்கிறோம். அது வெறும் மருட்கை. அறிவு விளக்கம் பெறுவதே கல்வி. எழுத்து வித்தை இல்லாமலே கூட அறிவு விளக்கம் பெறமுடியும். எழுத்துக்கள் எனப் படுபவை சில அடையாளங்கள் தான்; அந்த அடையாளங்கள் எல்லா இடங்களிலும் வேண்டும் என்று சொல்லமுடியாது. பல இடங்களில் 'எழுத்துக்கள்' உதவி புரியலாம்; ஆனால், அதுவே எல்லா வல்லமையும் கொண்டது அல்ல.

நம் நாட்டிலே 'கல்வி' என்றாலே 'எழுத்தறிவு' என்று ஒரு மருட்கை நிலவுகிறது. Three 'R's (Reading, writing & arithmetic) என்று வெள்ளைக்காரன் சொல்லிவிட்டானென் றால், அதற்குமேல் வேறு விளக்கமே நமக்குத் தேவை இல்லை அல்லவா? எழுத்தையே கல்வியாகக் கொண்டு, கல்வி நிலையங்களிலே படிக்கத் தொடங்கியபின் இந்த நாட்டில் வெள்ளை வேட்டிச் சாதி ஒன்று தோன்றியது. அந்த வெள்ளை வேட்டிச் சாதிக்கு ஆங்கிலம் ஒன்றே எல்லாமாகத் தெரிந்தது. அறிவு விளக்கம் வேண்டுமென்றால் ஆங்கிலம் இல்லாவிட்டால் முடியாது என்று இன்றும் சிலர் சொல்லுகிறார்களல்லவா? தன்னம்பிக்கை யின்மை இவர்களிடம் விளைந்ததற்குரிய காரணத்தை இந்த நாட்டுக் கல்வி வரலாறு தெளிவாகப் புலப்படுத்துகிறது. கல்வி நிலையங்களில் படித்தவர்களெல்லாம் வெள்ளை வேட்டிச் சாதியாராக மாறினார்கள்; மேலும் மனத்தளவில் வெள்ளைக்காரராகவும் மாறினார்கள்; அதோடு இந்த நாட்டுப் பொதுமக்களிடையே ஊடாடுவதையும் புறக்கணித்தார்கள். இந்தப் புறக்கணிப்பின் விளைவாக 'இந்த நாட்டு மக்களுக்கு எதுவுமே தெரியாது' என்ற ஒரு எண்ணம் உண்டாகிவிட்டது. அதைவிடப் பெரிய கேடு ஒன்றும் விளைந்தது. இந்த நாட்டுக்கே உரிய சொற்செல்வமெல்லாம் மங்க ஆரம்பித்தது. 'Parasite' என்றால் வெள்ளை வேட்டிச் சாதிக்குத் தெரியும்; அவனுக்குத் தமிழிலே அதைச் சொல்ல வேண்டுமானால், ஆங்கில அகராதியைப் புரட்டிப் பார்த்தபின் தமிழிலே மொழிபெயர்த்து 'ஒட்டுண்ணி' என்று சொல்லவேண்டியிருக்கிறது. தமிழிலேயே 'மல்லை' என்ற ஒரு சொல் இருக்கிறது என்பது வெள்ளை வேட்டிச் சாதிக்குத் தெரியாது. அப்படியே 'Centre of gravity யைத் தமிழிலே சொல்ல முடியாது' என்று மனங் குலைவது

வெள்ளை 'வேட்டிகளின் வழக்கம்; 'ஈர்ப்பு மையம்' என்பது வெறும் மொழி பெயர்ப்பு; தமிழிலே 'ஏண்' என்று ஒரு சொல் உண்டு என்பது எழுத்து விதிதை கற்ற 'வெள்ளை' யருக்குத் தெரியாது. (ஏணி என்ற சொல்லும் பொருளும் ஏண் என்ற அடிப்படையில் தோன்றியவையே)

இங்கே காட்டிய மல்லை, ஏண் என்ற சொற்களெல்லாம், தமிழ் நாட்டுத் தொழிலாளர்களிடையே இன்றும் வழக்கிலுள்ள தமிழ்ச் செல்வங்கள். இப்படிப்பட்ட செல்வங்களைக் கல்வி நிலையங்களில் புகுந்து வெளியேறிய சாதி புறக் கணித்து விட்டது. நாளடைவில் தமிழிலே கலைச் சொற்கள் இல்லை எனச் சொல்லுமளவிற்குத் துணிந்தும் விட்டது.

இன்று பிறந்த ஸ்பூத்னிக்குக்குத் தமிழிலே சொல் இல்லாமல் இருக்கலாம். ஆனால், மல்லையும் ஏணும் புதிய தத்துவங்கள் அல்லவே? பழைய கருத்துக்களுக்கும் புதிய கலைச்சொற்களைத் தேடவேண்டிய அவலம் இன்றுஏற்பட்டிருக்கிறது. இதுதான் இந்நாட்டுக் கல்வியரங்கிலே ஏற்பட்ட பெரிய அவலம்.

எழுத்தில்லாமல் அறிவு விளக்கம் பெறலாம். ஆனால், சொல் இல்லாமல் விளக்கம் பெறுவது என்பது இன்றைய நிலையில் முடியாது. ஆங்கிலத்திலேயே கல்வி கற்று வந்து, இந்த நாட்டின் மொழி வழக்கைப் புறக்கணித்து மறந்ததால், வெள்ளை வேட்டிக்காரர்களுக்கு ஆங்கிலச் சொல் இல்லாமல் வாழ முடியாது என்று தோன்றுகிறது. ஒரு இனத்துக்கு அவமானம் இதைவிட இன்னொன்று வேண்டுமா!

கட்டை வண்டி வெள்ளைக்காரன் வந்தபிறகு இறக்குமதியாகவில்லை. அந்த வண்டி எத்தனையோ பாகங்களை இணைத்துத்தான் உருவாகியிருக்கிறது. அந்தப் பாகங்களையெல்லாம் பொறியியற் கல்லூரியிலே படித்து முதல்தரமாக வெற்றி பெற்ற ஒருவரிடம் காட்டி, அவற்றின் பெயர்களைச் சொல்லும்படி கேட்டுப் பாருங்கள். என்னென்னவோ ஆங்கிலத்தில் சொல்லிப் பார்ப்பார்; அப்படியும் எல்லாப் பாகங்களுக்கும் அவரால் பெயர் சொல்ல முடியாது. ஆனால்,வண்டிப் பட்டறையில் உள்ள சாதாரணத் தொழிலாளியிடம் போய்க் கேட்டுப் பாருங்கள். ஒவ்வொரு சிறு பாகத்துக்கும் தமிழிலே பெயர் சொல்லுவான். அவனுக்குத் தமிழ்கூட எழுதப் படிக்கத் தெரியாது; ஆனால், சொல் தெரியும்; பொருள் புரியும். கட்டை வண்டியிலுள்ள பாகங்களைக் குறிக்கும் சில கலைச் சொற்களை இங்கே தருகிறேன்:

கிளிமூக்குச் சட்டம், மூக்கணை, ஏர்க்கால், எதிரடிக்கட்டை, தொப்பைக் கட்டை, சவாரித் தப்பை, குறுக்குப் பளுது, அச்சு, பார், வட்டை, ஆரம், கும்பம், பட்டா, உள்வாய்ப் பூண், சக்கு, கும்பக்கட்டு, வெளி விளிம்பு வட்டை, கடையாணி...இவை சில. இவற்றுக்குரிய பாகங்கள் எவை என்பது வெள்ளை வேட்டிச் சாதிக்குத் தெரியாது.

உண்மையில் கல்வியின் நோக்கம் நிறைவேற வேண்டுமானால், முதலில் தன்னம்பிக்கை வளர வேண்டும். தன்னம்பிக்கை வளர வேண்டுமானால், இன்றைய சூழ்நிலையிலுள்ள மருட்கை அகல வேண்டும். மருட்கை அகல்வதற்கு இந்த நாட்டு மக்களிடையே உள்ள 'சாதி' தொலைய வேண்டும். இந்தச் 'சாதி' அழிவதற்கு நாட்டு மொழியே கல்வி மொழியாக வேண்டும்.

[கட்டுரையில் குறித்துள்ள சொற்களுக்கு அடுத்த சுவடியில் படங்கள் வெளிவரும்]

# பொருள் சிறப்பு

டாக்டர் திருஞானசம்பந்தம்

நாம் பல பொருட்களை காண்கிறோம். அவைகளைப் பயன்படுத்துகிறோம். அவைகளைப்பற்றி ஆராய்ந்து, அவைகளின் பண்புகளை மேன்மேலும் அறிந்து வருகிறோம்.

உயிர் வாழ்க்கைக்குக் காற்று இன்றியமையாத பொருளாகும். காற்று என்பது ஒரு தனிப்பொருள் அல்ல. காற்றில் அடங்கியுள்ள பொருள்கள் பல. தகுந்த கருவிகளின் துணையினால் காற்றினைப் பிரிக்கலாம். அவ்வாறு பார்க்கும்போது, தனிப்பண்புகள் வாய்ந்த பல பொருட்கள் கிடைக்கின்றன. அவைகளின் சிறப்பு காரணமாக அவைகளைத் தனிமங்கள் (Elements) என்று அழைக்கிறோம். பல தனிமங்கள் சேர்ந்த கலவையே காற்று எனப்படும் கலவைப் பொருள் (Mixture) ஆகும். நைட்ரஜன், ஆக்சிஜன் என்ற இரு வாயுப்பொருள்களும் பெரும்பகுதியாகக் காற்றில் கலந்துள்ளன. நைட்ரஜன் என்பது உப்புவாயு. ஆக்சிஜன் என்பது பிராணவாயு அல்லது உயிரியம் என்று அழைக்கப்படுகிறது. இவ்விரண்டுவாயுப்பொருள்களேயன்றி ஐந்து மந்த வாயுக்கள் மிகமிகச் சிறிய அளவில் காற்றில் கலந்து உள்ளன. அவை ஹீலியம், நியான், ஆர்கான், கிருப்டான், செனான் என்று அழைக்கப் படுகின்றன. இந்தத் தனிமங்களேயன்றி நீராவி, கரியமிலவாயு முதலிய கூட்டுப் பொளுள்களும் காற்றில் இடம் பெறுகின்றன.

உயிர் வாழ்வதற்குக் காற்று மட்டும் இருந்தால் பயனில்லை. அடுத்து வேண்டப்படுவது நீராகும். உலகில் பெருவாரியாகக்கிடைக்கும் இந்த நீர்ப்பொருள் எவ்வகைப் பொருள்? இது தனிமமும் அல்ல. கலவையும் அல்ல. இரு தனிமங்கள் இயற்கையின் விதிப்படி கூடியமைந்த கூட்டுப் பொருள் (Compound) இதுவாகும். ஆக்சிஜன் என்னும் வாயுப்பொருளைப் போலவே, ஹைட்ரஜன் என்னும் ஒரு சிறந்த வாயுப் பொருள் உள்ளது. இந்த இரண்டு தனிமங்களும் இணைந்து நீர்என்னும் கூட்டுப்பொருளாக நமக்குக் காட்சியளிக்கிறது.

காற்று, நீர் இவைகள் மாத்திரம் இருக்குமானால் பல நாட்கள் உயிர் வாழ முடியாது. அடுத்து வேண்டுவது உணவாகும். உணவுப் பொருள்கள் பலவுள்ளன. தனிமப் பொருள்கள், கலவைப் பொருள்கள் கூட்டுப்பொருள்கள் பல சேர்ந்தே நமக்கு உணவாகப் பயன்படுகின்றன. கார்போ ஹைட்ரேட்டுகள், புரதப் பொருள்கள், வைட்டமின்கள் முதலிய பலபொருள்கள் நமக்குத் தேவையாகின்றன. இப்பொருள்கள் எல்லாம் இயற்கையின் ஆற்றலாலும், அருளாலும் நமக்குக் கிடைப்பனவாகும்.

காற்று வேண்டும். நீர்வேண்டும். உணவு வேண்டும். உடையும் வேண்டும். பஞ்சு, பட்டு, கம்பளி முதலிய பொருள்களினால் உடைகள் தயாரிக்கின்றோம். பஞ்சு தரும் பருத்திச் செடியை வளர்ப்பதற்குப் பல உரங்கள் பயன்படுத்துகிறோம். பட்டு இழை, கம்பளி இவைகளில் உள்ள பொருள்கள் என்னென்ன என்று ஆராய்ந்து அறிகிறோம்.

இவ்வறிவைக் கொண்டு நைலான், ரேயான் முதலிய செயற்கைப் பொருள்களும் உருவாகியுள்ளன.

இனி மக்கள் வாழ வீடு வேண்டும் வீடுகட்டுவதில் எத்துணையோ பொருட்கள் பயன்படுகின்றன. மண், கல், மரம், இரும்பு, சிமெண்டு, கண்ணாடி முதலிய பலவிதமான பொருள்கள் கையாளப்படுகின்றன. உறுதி கொடுப்பதற்காகவும், அழகளிப்பதற்காகவும் பலவித முன்னேற்றங்கள் செய்திருக்கிறார்கள். வெய்யிலின் கொடுமையை நீக்குவதற்கும், பனியின் பொருக்க முடியாத குளிரைப் போக்குவதற்கும் உகுந்த குளிர்விக்கும் அல்லது அல்லது வெப்பமூட்டும் புதிய சாதனங்கள் (Refrigerators) உருவாகியுள்ளன.

காலால் நடந்தே பயணம் சென்ற காலம்மாறிவிட்டது. கார்கள், கலங்கள், வானவூர்திகள் முதலிய பல்வேறு சாதனங்களின் உதவியால் விரைவில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லுகிறோம் ஒலியையும் விஞ்சும் வேகத்துடன் செல்லும் வானவூர்திகள் கண்டுவிட்டோம். உழைப்பின் அயர்வைப் போக்கவும், மனமகிழ்ச்சி கொள்ளவும் நிறுவப்பட்டுள்ள சாதனங்கள் பல. சினிமா, ரேடியோ, டெலிவிஷன் முதலிய சாதனங்கள் இந்த நூற்றாண்டு மக்கள் அடைந்துள்ள முன்னேற்றத்தின் அறிகுறிகள்.

அம்மை, காலரா முதலிய நோய்களைத் தடுக்கவும், நோய்வந்த போது காக்கவும் மருத்துவத்துறையில் பெனிசிலின் முதலிய பல அரிய மருந்து வகைகள் அறிய வந்துள்ளன. சிகிச்சை முறைகளில் பயன்படும் கருவிகள் எத்துணையோ! மக்களின் மூப்பினைத் தடுக்கவும் மருந்துகள் உருவாகின்றன.

இவ்வாறு அறிவியல் ஆராய்ச்சிகளின் உதவியால் பொருள்களின் அறிவு வளர்வதுமட்டுமின்றி, அப்பொருள்களின் சிறப்பால் மனித வாழ்வு சிறக்கிறது. புதுப்புதுப் பொருள்கள் உருவாக்கப்பட்டு வாழ்வு வளம்பெறுகிறது. அப்பொருள்கள் மேன்மேலும் வளர்க்கப்பட வேண்டும். அறிவியல் வளர வேண்டும். யாவரிடமும் பரவ வேண்டும். ●

## ஆச்சாரியன்



முன்பெல்லாம் ஆசிரியனை ஆச்சாரியனென்று அழைத்தல் வழக்கம். ஆச்சாரியனென்றால் நன்னடத்தை யுள்ளவனென்றாகும். தான் சீரிய முறையில் நடந்துகொண்டு மக்களை தன்னைப்போலவே நடக்குமாறு செய்பவன் ஆச்சாரியன். இத்தகைய ஆச்சாரியர்களின் பெரு முயற்சியினாலேயே நாடுகள் உருவாகியிருக்கின்றன. இன்று இந்தியாவுக்குப் புத்துரு அளிக்க வேண்டும்; நாட்டை உருவாக்கும் பணி இன்று நமக்கு ஏற்பட்டிருக்கிறது. நன்னடத்தையுள்ள ஆசிரியர்களின்றி அது நடக்கக்கூடியதல்ல.

— விநோபா அடிகள்.



# வெறும் கல்வி

— வினோபா அடிகள்

தேசப்பணியில் ஆவலுள்ள ஒருவரிடம் இன்னொருவர், "ஐயா, உங்களால் எந்த வேலையை நன்றாகச் செய்ய இயலும்?" என்று கேட்டார்.

வாலிப வயதினரான அவர், "என்னால் கல்வி அளிக்க, பிள்ளைகளுக்குப் போதிக்கமட்டும் முடியும். எனக்கு அவ்வேலை செய்வதில் ஆசையு மிருக்கிறது" என்று பதில் சொன்னார்.

"இது சரிதான். ஒருவனுக்கு ஒரு வேலை செய்யத் தெரியுமென்றால் அதைச் செய்வதில் ஆசையிருத்தல் இயல்பே. ஆனால் உங்களால் வேறு ஏதேனும் செய்ய முடியுமா, முடியாதா?"

"ஐயா, முடியாது. எனக்கு வேறொன்றும் செய்யத் தெரியாது. எனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கத்தான் தெரியும். இவ் வேலையை என்னால் நன்கு செய்ய முடியும் என்று நம்புகிறேன்."

"சரி, சரி. நீங்கள் நன்றாய்ச் சொல்லிக் கொடுப்பீர்களென்பதில் சந்தேகமேது? ஆனால் எதை நன்றாய்ச் சொல்லிக் கொடுப்பீர்கள்? நூற்பா? பஞ்சு வெட்டுதலா? நெசவா? இவைகளில் எது உங்களுக்கு நன்கு சொல்லித்தர வரும்?"

"இதெல்லாம் சொல்லிக் கொடுக்க எனக்குத் தெரியாது."

"அப்படியானால் 'தையலோ', 'சாயம் தோய்த்தலோ', தச்சு வேலையோ?"

"இவைகளில் எதுவும் எனக்குத் தெரியாது."

"சமையல் செய்தல், மாவு அரைத்தல் முதலிய வீட்டு வேலைகள் சொல்லிக் கொடுக்க முடியுமா?"

"வேலையென்று நான் எதையும் செய்ததே யில்லை. பாடம் சொல்லிக் கொடுக்க மட்டும்........."

"ஐயா, நான் எதைப்பற்றிக் கேட்டாலும் 'இல்லை, தெரியாது' என்கிறீர்; ஆனால் சொல்லிக் கொடுக்கும் வேலைமட்டும் செய்ய முடியுமென்கிறீரே, இதற்கு என்ன அர்த்தம்? தோட்டவேலை சொல்லித் தரத் தெரியுமா?"

தேச சேவையில் ஆசையுள்ள அவர் சிறிது கோபமுற்றவராய், "நீங்கள் கேட்பது வேடிக்கையாயிருக்கிறதே! நான்தான் எடுத்ததுமே எனக்கு வேறெந்த வேலையும் தெரியாதென்று சொல்லி விட்டேனே. என்னால் இலக்கியம் கற்பிக்க முடியும்" என்றார்.

கேள்வி கேட்டவர் சிறிது கிண்டலாக, "நீங்கள் இப்பொழுது சொன்னது சரி. உங்கள் கருத்து இப்பொழுதுதான் சிறிது புரிந்தது. நீங்கள் துளசி ராமாயணம் போன்ற நூலொன்றை எழுதுவதற்குச் சொல்லிக் கொடுப்பீர்களா?" என்றார்.

இப்பொழுது அத் தேசபக்தருக்கு முகம் சிவந்துவிட்டது. அவர் வாயிலிருந்து கொஞ்சம் காரசாரமான

வார்த்தைகள் வெளிவரவிருந்தன. அதற்குள் கேள்விகள் கேட்டவர் இடைமறித்து, 'பொறுங்கள். ஆத்திரம் வேண்டாம். பிள்ளைகளுக்குப் புலனடக்கம் போதிக்கத் தெரியுமா உங்களுக்கு? சாந்தம் ஏற்படுமாறு செய்யத் தெரியுமா?'' என்று கேட்டு வைத்தார்.

இப்பொழுது நிலைமை உக்ரமாகி விட்டது; எரியும் தீயில் மண்ணெண்ணெய்யை ஊற்றியது போலாகிவிட்டது. தீ குப்பென்று கிளம்புவதற்கு இருந்த சமயத்தில் கேள்வி கேட்டவர் அதில் நீரை ஊற்றி அதை அணைத்துவிட்டார். ''எனக்கு உங்கள் கருத்துப் புரிந்தது. உங்களுக்கு எழுதப் படிக்கச் சொல்லிக் கொடுக்கத் தெரியும். வாழ்க்கையில் இவைகளும் சிறிது பயன்படக்கூடியவையே. இவைகளால் சிறிதும் பயனில்லை என்பதற்கில்லை. போகட்டும், உங்களுக்கு நெசவு கற்றுக்கொள்ளச் சம்மதமா?''

இனி, புதிய விஷயமெதுவும் கற்றுக்கொள்ளும் ஆசை எனக்கில்லை. மேலும், கற்றுக் கொண்டாலும் இம்மாதிரியான வேலை எதுவும் செய்து கைக்குப் பழக்கமில்லாமையால் எனக்கு நெசவு வரவும் வராது.''

''உண்மைதான். இதனால் கற்றுக்கொள்வதற்குச் சிறிது அதிகக் காலம் பிடிக்குமென்பது உண்மையே. ஆனால் வரவே வராது என்று ஏன் சொல்லுகிறீர்?''

''எனக்கு இது வராதென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால் மிகவும் பாடுபட்டுப் பயில்வதனால் இது வருவதாகவே வைத்துக் கொண்டாலும், எனக்கு இதில் பெருத்த சிரமம் இருப்பதாய்த் தோன்றுகிறது. ஆகையால் என்னால் இது ஆகாது என்றே எண்ணிக்கொண்டு விடுங்கள்.''

''சரி. நீங்கள் எழுதச் சொல்லிக் கொடுப்பதற்குச் சித்தமாய் இருப்பதைப்போல் எழுத்து வேலையை உங்களால் செய்ய முடியுமா?''

''ஆகா பேஷாய் எழுதுவேன். ஆனால் சதா உட்கார்ந்து கொண்டு எழுதிக்கொண்டிருப்பதும் தொந்தரவு பிடித்த வேலைதான். ஆயினும் அதைச் செய்வதில் எனக்குத் தடையில்லை.''

இச் சம்பாஷணை இத்தோடு முடிந்தது. இதன் விளைவு என்னவென்பது நாம் அறிந்துகொள்ளத் தேவையில்லை. ஆசிரியர்களின் மனப்போக்கைப் புரிந்து கொள்வதற்கு இச் சம்பாஷணை போதும்.

***இன்றைய ஆசிரியர்:***

தற்காலத்தில் ஆசிரியரென்றால், (1) வாழ்க்கைக்குப் பயன்படும் எத்தகைய தொழிலும் தெரியாதவர், (2) எந்தப் புதிய உபயோகமான விஷயத்தையும் கற்கச் சுபாவமாகவே இயலாதவர், பாடுபடுவதென்றால் அலுத்துக் கொள்பவர், (3) போதிக்கத் தெரியுமென்ற மமதை மட்டில் கொண்டவர், (4) புத்தகங்களில் புதைந்து கிடப்பவர், (5) சோம்பேறி-என்பது பொருள்.

வெறும் கல்வி என்பதற்கு வாழ்க்கையிலிருந்து பிரிக்கப்பட்ட ஜீவனற்ற கல்வியென்பதும், ஆசிரியன் என்பதற்கு நடைப் பிணம் என்பதும் பொருள்!

(கல்விச் சிந்தனைகள் என்ற நூலிலிருந்து)

கைத்தறி அச்சகம், 3, தாமஸ் வீதி, கோயமுத்தூர்-1.